தென்றல் வெளியீடு . கசக

# குறள்நெறி இசையமுது.

## திருக்குறள் விளக்கப் பாடல்கள்.

முதற்பகுதி

★★

ஆசிரியர் :

ப. கண்ணனார்.



தென்றல் நூற்பதிப்புக் கழகம்,

சலகண்டபுரம். ** சேலம் மாவட்டம்.

முதற்பதிப்பு: வள்ளுவராண்டு 1998 சித்திரை,
ஆங்கிலம் 1967 ஏப்ரல்.

அறத்துப்பால் 10
பொருட்பால் 17
இன்பத்துப்பால் 6

ஆக, முதல் 33 அதிகாரங்களுக்கான
33 இசைப் பாடல்களைக் கொண்டது.



விலை 0—75




இரா. நெடுஞ்செழியன்,

கல்வி-தொழில் அமைச்சர்.

செயிண்ட் ஜார்ஜ் கோட்டை,
சென்னை-9

ஏப்ரல் 23, 1967.

உலகப் பேரறிஞர்களின் மதிப்பையும், பாராட்டுதலையும் பெற்ற திருக்குறளின் கருத்துக்களை இசைப்பாட்டின் மூலம் பரப்பும் நல்ல நோக்கத்தை மேற்கொண்ட சலகண்டபுரம் நண்பர், திரு. ப. கண்ணன் அவர்கள் "குறள்நெறி இசையமுது" என்ற பெயரில் ஒருநூலை யாத்திருப்பது பாராட்டி வரவேற்கத் தக்கதாகும்.

இசையும் தாளமும் பொருந்த, எடுப்பு, தொடுப்பு, படுப்பு, முடிப்பு, சந்தம் என்ற முறையில் பாட்டினை வகுத்து, அழகிய, இனிய, எளிய தமிழில் திருக்குறள் கருத்துக்களை விளக்கிக் காட்ட முற்பட்டிருப்பது ஆசிரியரின் அரும்பெரும் திறமையைக் காட்டுவதாகும். இசையரங்கம் ஏறும் இசைவாணர் அனைவரும் இந்த இசைப் பாட்டுகளைப் பயன்படுத்துவார்களே யானல், குறள்நெறிக் கருத்துக்கள் எல்லோருடைய உள்ளத்தையும் கொள்ளை கொண்டு, பதிந்து நிற்க வாய்ப்பு ஏற்படும். தமிழகத்து இசைவாணர்கள் இந்த நூலைப் பெரிதும் வரவேற்றுப் பயன்படுத்திக் கொள்வார்களாக!

இதைப் போன்று, சங்க இலக்கியங்களின் கருத்துக்களை யெல்லாம் இசைப்பாட்டின்மூலம் மக்களுக்கு அறிமுகப்படுத்தும் முயற்சியை ஆசிரியர் கண்ணன் அவர்கள் மேற்கொள்ளுவார் என்று நான் எதிர்பார்க்கிறேன்.

அவருடைய கலையுள்ளம் வாழ்க! அவரது முயற்சி வளர்க! அவரது தொண்டு வெல்க!

இப்படிக்கு,

**இரா. நெடுஞ்செழியன்.**

பெறுநர்:

திரு. ப. கண்ணன் அவர்கள்,
தென்றல் நூற்பதிப்புக் கழகம்,
சலகண்டபுரம். சேலம் மாவட்டம்.



திருக்குறள் மணி;
அ. இரத்தினசபாபதி,
ஆசிரியர் "குறள் மலர்"

உரிகம்,
கோலார் தங்கவயல்-2
(மைசூர் மாநிலம்)

விண்ணிற் புகழ் மேவும் வியன்கொள் வள்ளுவரின் திருக்குறளை இன்று அறியார் வெகுசிலரே. தமிழன்னைக்குத் திருமுடியாகி, தமிழர் தலைநிமிர்ந்து நிற்கவும், உலக மக்களனைவரும் ஒருகுலத்தவரென உணரவும், அவர்கள் வாழ்வாங்கு வாழ்ந்து வளம் பெறவும் வழிவகுத்துரைத்த முதற் பெருநூல் திருக்குறளேயாம்

எப்பொருளும் மக்கள் நினைவில் நீடு நிற்பதற்குத் துணையாவது இசை. குறள்நெறி பாரிற் பரவவேண்டும் எனும் பெருநோக்குடன் குறட்பாக்களையும், குறட் கருத்துக்களையும் இணைத்து இசையமுது அளிக்கின்றார், கலைமணி ப. கண்ணன் அவர்கள்.

'குறள்நெறி இசையமுது' எனும் முதற் படைப்பில் 33 குறட்பாக்கள் இனிய அமுதாக அமைந்துள்ளன, இயல், இசை, நாடகம் ஆகிய முத்தமிழிலும் தேர்ச்சிபெற்ற ஆசிரியரின் இசையமுது இனிப்பதில் வியப்பின்று; செவிக்கு மட்டுமன்று; உள்ளத்திற்கும் உணர்ச்சிகளுக்குந்தான்.

குறள்நெறியே அறநெறி; அருள்நெறி; அந்நெறிநிற்போரே அறவழி நிற்போர்; ஏனையோர் மறவழி செல்வோரே. இசைக்கு இசையார் எதற்கும் இசையார்! ஆதலின் அருள் நெறியை இசைவழியே பரப்பும் ஆசிரியரின் சீரிய முயற்சி பாராட்டற்குரியது.

எங்கணும் எழிலுற, இசையுற முழங்கட்டும் குறள்நெறி இசையமுது! செவிவழிப் புசிப்போர் சிந்தை குளிரட்டும்! சிந்தனையைக் கிளரட்டும்! செயல்படச் செய்யட்டும்! எமது நல்வாழ்த்துக்கள்.

இங்ஙனம்,

அ. இரத்தினசபாபதி.

# முன்னுரை.

இயல், இசை, நாடகம் ஆகிய முத்தமிழ்க் கலைகளின் வலிவும்,வனப்பும், தமிழகம் நன்கு அறிந்துள்ளது. எனவேதான் சங்க காலத்துக்கு முன்பிருந்தே அவற்றினை நன்கு போற்றிப் புரந்து வந்துள்ளது. இது தமிழ் வரலாறு காட்டும் உண்மை.

"புதியன புகுதலும் பழையன கழிதலும் வழுவல" என்ற முறையில், முத்தமிழ்க் கலைகளிலே புதிய கருத்துக்களை, புரட்சி எண்ணங்களை வளரவிட்ட தமிழ்ப் பேரறிஞர்கள் பலருண்டு. அவர்களிலே பகுத்தறிவும், சமநெறியும் பாங்குற விளைத்தவர்கள், பாவேந்தர் பாரதிதாசன் அவர்களும், கலைவேந்தர் அண்ணு அவர்களும் ஆவார்கள். அவர்களின் சீரிய வழியில் என்சிந்தனை சென்றதால் விளைந்தவையே இந்தக் "குறள்நெறி இசையமுது"ப் பாடல்கள்.

திருக்குறள் தமிழனுக்குரிய வாழ்வு நெறி வகுத்தளிக்கும் சட்ட நூல். ஞானத்தமிழ்ச் சுரங்கம். தன்மான ஒளிவிளக்கு. அதே வேளையில் இனச்சார்பு, மொழிச்சார்பு, சமயச்சார்பு கடந்து, அனைவர்க்கும் பயனளிக்கும் உலகப் பேரறப் பொது நூல்! பழமைக்குப் பழமையானது! புதுமைக்குப் புதுமையானது! காலத்தால் அழியாத கருத்துக் கருவூலம்.

இத்தகு உயர் தனிக் குறள்நெறி இசைக் கலையில் இடம் பெறவேண்டுமென்று இருபதாண்டுகளுக்கு முன்னரே விரும்பினேன். திரு. பாவலர். தொ. ப. வேலாயுதசாமி அவர்களைக் கொண்டு அறத்துப்பால் பாடல்கள் புனையச்செய்து 1 – 9 – 49ல் புத்தகமாக வெளியிட்டேன். இசைப் புலவர்களுக்கெல்லாம் அனுப்பி வைத்தேன்; எண்ணம் ஈடேறவில்லை;

இப்பொழுது காலம் கனிந்திருக்கிறது. தமிழகத்திலே தனித் தமிழக அரசு மலர்ந்திருக்கிறது. என்னுள் புதியவூக்கம் எழுந்தது. திருக்குறள் அதிகாரம் 133-க்கும் இராக தாள மெட்டமைப்புக்களோடு 133 இசைப் பாடல்கள் புனைந்தேன்.

"குறள் மலர்" "சமநீதி" இதழகள் அன்போடு பாடல்களை வெளியிடுகின்றன. அத்தோடு நின்றுவிடவில்லை.

இசைவாணர் டி. பி. பாலகிருஷ்ணன் அவர்கள் பாடல்களை இசைமரபு-இலக்கணம் பிசகாமல் இனிமையாகப் பாடுகின்றார். குறள்நெறியை நான் விளக்கிடவும், அவர் பாடவுமாக இசையரங்குகளும் நடத்தி வருகின்றோம்.

அறம், பொருள், இன்பம் ஆகிய முப்பாற் பாடல்களும் நான்கு பகுதிகளாகப் பகுக்கப்பெற்று, முதற்பகுதி நூல் வடிவு பெறுகின்றது. இதற்கு அழகிய அணிந்துரை வழங்கிய தமிழகக் கல்வியமைச்சர், நாவலர், இரா. நெடுஞ்செழியன் M.A. அவர்கட்கும். 'குறள் மலர்" ஆசிரியர், திருக்குறள்மணி, அ. இரத்தினசபாபதி அவர்கட்கும் என்றும் எனது பணிவன்பான நன்றி உரித்தாகுக.

குறள்நெறியாம் அருள்நெறி பரவுவதை விரும்புகின்ற அறிஞர்கள், பண்பாளர்கள், பாடகர்கள், கலைஞர்கள், பொது மக்கள் அனைவரும் இப்புதிய கலையாக்கம் பற்றிய கருத்துரை புகன்று, மதிப்புரை நல்கி, செழித்திடவுதவுமாறு பணிவோடு வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்.

தென்றல் நூற்பதிக் கழகம் வெளியிடும் இந்நூலுக்கும் பொதுமக்களின் நல்லாதரவு கிட்டுமென்று நம்புகிறேன்.

வாழ்க தமிழ் மொழி! வளர்க குறள்நெறி!

இங்ஙனம்,

சலகண்டபுரம்
29—4—1967

ப. கண்ணன்.





# போற்றி யகவல்.



ஞாயிறுபோற்றி வான்மதிபோற்றி
மாயிருந்தலைவன் மலரடிபோற்றி
தென்னகம்போற்றி திருக்குறள்போற்றி
திருமறையீன்ற தேன்தமிழ்போற்றி
மன்னுயிர்போற்றி பொன்னவைபோற்றி
மாந்தன்நெறியின் மாண்பிதுபோற்றி
தெள்ளிய குறளறம் உலகெலாம்போற்ற
வள்ளுவர்தம்பதம் வாழ்த்திவணங்குவமே

**வாழ்க தமிழ் மொழி!**
**வளர்க குறள் நெறி!**

| பக்கம். | பாட்டுவரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 25 | 9 | அச்சாமை | அஞ்சாமை |
| 26 | இராகம் | மோகணம் | மோகனம் |
| 32 | 14 | வைத்தாறு | வைத்தூறு |

# 1. கடவுள் வாழ்த்து.

அறத்துப்பால். அதிகாரம்-1.

இராகம்-நாட்டை. தாளம்-ஆதி

எடுப்பு.

அகரமுதல எழுத்தெல்லாம்—ஆதி
பகவன் முதற்றே உலகென்பது உண்மை. (அக)

தொடுப்பு.

பகர்ந்தும் பகரொணாதான் பண்பறிவின்
முதல்வன்
நுகர்ந்தும் நுகரொணாதான் நுண்பொறியின்
தலைவன். (அக)

படுப்பு.

மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தவர்
நிலமிசை நீடு வாழ்குவரே.

முடிப்பு.

நலமருள் அறவாழி அந்தணனைப் பணிவோம்
மலமிருள் பிறவாழி நீந்திடத் துணிவோம். (அக)

சந்தம்.

ஐம்பொறி விழைவினை அவிப்பவரானவர்
செம்பொருள் அருளறம் விளைப்பவராகுவர். (அக)

இறைவன தருளினை நிறைமன தில்கொண்டு
முறையுடன் அடைவதில் கனிவுடன் முயலுக.

நேர்மை—செயல்புரிவது
வாய்மை—நிலைபெறுவது

நினைவினில் கடமையில் இதைமற வாதிரு
வினையதில் மடமையை வளரவி டாதிரு. (அக)



## 2. வான் சிறப்பு.

அறத்துப்பால், அதிகாரம்-2.

இராகம்-பந்துவராளி. தாளம்-ஆதி.

எடுப்பு.

அமுதினைப் போன்றது வான்மழையே—நமது
ஆருயிர் காப்பதில் நிகரிலையே. (அ)

தொடுப்பு.

குமுறும்கடல் வளமும் கொட்டும் மழையின்றேல்
குறைந்திடும் எனிலந்த நலந்தனையே கண்டோம்
(அ)

படுப்பு.

சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு.

முடிப்பு.

துறப்பவர்க் கருள்வதும் துயரினைக் களைவதும்
தூய்மை ஒழுக்கமொடு வாய்மையை வளர்ப்பதும்
(அ)

சந்தம்.

மழையெனும் வரவது குறைந்திடுமானல்
பிழையொடு பசியது மிகுந்திடும் உலகில்
தானமதும் செய்தொழிலும் நிலவுதல்
வானமழை பெய்வதனுல் நடைபெறும். (அ)

# 3. நீத்தார் பெருமை.

அறத்துப்பால். அதிகாரம்-3.

இராகம்-ஆரபி. தாளம்-சாபு.

எடுப்பு.

இருமைவகை தெரிந்தே ஈண்டறம் பூண்டவர்
பெருமையை மறவாதே—மனமே. (இரு)

தொடுப்பு.

அருமைதனக்குரியார் ஐந்தவித்தாரல்லரோ?
அறவோரும் அவரே அந்தணரும் அவரே. (இரு)

படுப்பு.

செயற்கரிய செய்வார் பெரியார் சிறியவர்
செயற்கரிய செய்தலில் ஏலாதவரே.

முடிப்பு.

இயற்கையில் துறந்தாரின் பெருமை
மிகப்பெருமை
இந்திரன்கெட்டதுவோ சிறுமை மிகச்சிறுமை
(இரு)

சந்தம்.

நிறையும் மொழியுள பெரியோர் மாட்சியை
மறையின் மொழியது விரைவில் காட்டிடும்
சுவைவூ றொளியுடன் ஓசைமணமெனும்
வகையின் ஐந்திலும் வாய்மையுணர்ந்தவர்
(இரு)

## 4. அறன் வலியுறுத்தல்.



அறத்துப்பால். அதிகாரம்-4

இராகம் பைரவி. தாளம்-ரூபகம்.

எடுப்பு

மாசிலா மனதுடனே வாழ்க—நல்ல
மாத்தமிழின் பண்பினிலே பூத்திடும்மெய்
அன்பினிலே. (மா)

தொடுப்பு.

ஆசையுடன்கோபம் பூசல்பொறாமை
அறநெறிதேய்த்திடும் புறநெறிவிடுத்தே
அறிவுடையோர் வழியினிலே
பரிவொடுசெல் பயனடைவாய் (மா)

படுப்பு

மனத்துக்கண் மாசிலன் ஆதல்அனைத்தறன்
ஆகுலநீர பிறவாகும்.

முடிப்பு.

கனத்தொடு சிவிகை சுமப்பவன்மேலே
களிப்பொடு ஊர்தலை சிறப்பெனவேண்டாம்
கருதிடுவாய் சமநெறியை
ஒழுகிடுவாய் மனிதரிடை, (மா)

சந்தம்.

சிறப்புடனே செல்வமதை மிகப்பெரிது நல்கும்
உவப்புடனே நல்லறமே செயத்துணிவுகொள்க

அறத்தினில் பெறுவதுவே பேரின்பம்
திறத்தினில் நீபுரிவாய் நாளென்றும்.

பகுத்தறிக கண்ணனது இசைப்பனுவலாலே
மிகுத்திடுக பன்னலமும் அறச்செயலினாலே

(மா)



# ௫. இல்வாழ்க்கை.

அறத்துப்பால். அதிகாரம்-5.

இராகம்-காம்போதி. தாளம்-ஆதி.

எடுப்பு.

இல்வாழ்வே இதமான வாழ்க்கை—நண்பா
இன்பத்துள் இன்பமே அன்பினுக்கன்பாமே (இல்)

தொடுப்பு.

நல்வாழ்வின் பண்பாலே நலிந்தோரும் உயர்வாரே
எல்லோரும் அறவாழ்வில் இயல்போடு
இணைவாரே. (இல்)

படுப்பு.

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல்
தானென்னும்
ஐம்புலத்தாரோம்பல் தலையாகும்.

முடிப்பு.

மன்பதைக்கன்பாகும் மாண்பினில் துணையாகும்
தென்போடு திருவாக்கும் தெளிவோடு
நலம்சேர்க்கும். (இல்)

சந்தம்

அறத்தின் வழியதில் கருத்தின்வலிவொடு
திறத்தில் நிகழ்வது பெருமைதரும்
புறத்து நெறியினில் பரத்தையணுகுதல்
தரத்தில் இழிவொடு சிறுமைதரும்

கருத்தில் இனிக்கும் குறளறமே
இசைத்து நடத்து நலம்வருமே

வாழ்விலும் தாழ்விலும்
வசைபெறு நிலையிலும்
சூழ்விலும் சுழலிலும்
குறைவற நடைபெறும். (இல்)



## 6. வாழ்க்கைத் துணை நலம்.



அறத்துப்பால். அதிகாரம்-6

இராகம்-கல்யாணி. தாளம்-ஆதி.

எடுப்பு.

வினைமாட்சியுடையாளை துணைமாட்சியாய்க்
கொள்க
மனையறம் விழைபவனே—மகனே. (வி)

தொடுப்பு.

மனைமாட்சி இல்லாள்கண் இல்லையானல்
வாழ்க்கை
எனைமாட்சித்தாயினும் இல்லையாம் அதனலே.(வி)

படுப்பு.

தெய்வம்தொழாமலும் கொழுநனைத்தொழுபவள்
பெய்யெனப் பெய்யும்மழை போன்றவளே.

முடிப்பு.

மெய்யறம் இதுவாகும் இல்லறம் இனிதாகும்
மேன்மையுறும் அதுவும் தாழ்மையில்லாதபோது
(வி)

சந்தம்.

மங்கலம் என்பது மனைமாட்சி—அதன்
நன்கல மாவது பிள்ளைகளே
திங்களும் பரிதியும் போலிவரே—பெறும்
கண்களுக் கன்பது புரிகுவரே

மணவாளரின்வழி படுமுயர் மனைவியை
குணமாநிதியென குவலயம் புகழ்தரும். (வி)



# 7. மக்கட்பேறு.

அறத்துப்பால், அதிகாரம்-7.

இராகம்-தோடி. தாளம்-ஆதி.

எடுப்பு.

பெற்றிடும் பேறல்லவோ புத்தறிவுபடைத்த
மக்களைப் பெறுவதுவே—பெருமை (பெ)

தொடுப்பு.

கற்றறிமேதையராய் இப்புவிபோற்றுகையில்
பெற்றபொழுதினுமே பெரிதுவப்பாள் அன்னை.
(பெ)

படுப்பு:

தந்தைமகற்காற்றும் நன்றி அவையத்து
முந்தி இருப்பச் செயலாகும்.

முடிப்பு.

தந்தைக்கு மகனுற்றும் நல்லுதவி ஒன்றுண்டு
எந்நோற்ருனே பிறக்க என்றுலகே வியக்க. (பெ)

சந்தம்.

மக்கள்மெய் தீண்டிடல் உடலினுக் கின்பம்
சொற்களைக் கேட்டிடல் செவியினுக் கின்பம் (பெ)

குழல் இனிதென்பார் யாழ்இனி தென்பார்
குறையுள ஒலியதில் உயிரிலையே,

மழலையின் இனிமையில் மணிமொழி தமிழினில்
மனதினில் நிறைசுகம் நிகரிலையே,

குறள்நெறிக் கண்ணன் பாடலே:
குணமொடு நன்மை நாடலே!

அமிழ்தினும் இனியது அகமது குழைவது
அரிதினும் அரியது பரிவினில் மலர்வது. (மெ)



# 8 அன்புடைமை.

அறத்துப்பால். அதிகாரம்-8.

இராகம்-சங்கராபரணம். தாளம்-சாபு.

எடுப்பு.

துன்பும் துயரும் துடைத்திடுக—
அன்போடெவர்க்கும்
துணைசெய்து புகழ்பெறுக—பண்புடனே. (து)

தொடுப்பு.

என்பேதும் இல்லதனை வெயில்போலக்காயுமே
அன்பேதும் இல்லதனை அறமான ஞாயிறது. (து)

படுப்பு.

அறிவுக்கு எல்லையேது பரிவுக்குப் பகையேது
அனைத்துள்ளும் அன்பினை விளைத்திடும்போது.

முடிப்பு.

நெறியோடு வாழ்பவர்க்கும் அருளின்றேல்
பயனேது
நேயம் வளருதற்கும் அன்பல்லால் வழியேது. (து)

சந்தம்,

புனிதநெறியினில் மனிதனிருள்மனம்
முனையும் பொழுதினில் இனிமையரம்.
கண்ணன் குறள்நெறிப் பனுவல் இதனால்
எண்ணம் அருள்வழி விரையுமாம்.
அகத்துள் முளைத்தன்பு விளைக்கும் பண்பிலே
புறத்தும் இனித்திடக் கொடுக்கும் அன்பிலே. (து)

# 9. விருந்தோம்பல்.

அறத்துப்பால். அதிகாரம்-9

இராகம்-இந்தோளம். தாளம்-ஆதி.

எடுப்பு.

விருந்தோம்பும் பண்பது பெருந்தனமே—நண்பா
வேள்வியது புரியின் புகழ்விளைந்திடுமே. (வி)

தொடுப்பு.

இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம்
விருந்தோம்பும்
வேளாண்மை செய்தலின் பொருட்டாம் உலகிலே
(வி)

படுப்பு.

விருந்தெனவந்தவர் வெளியில் இருக்கவே
மருந்தையும் உண்ணுதே மாண்பதுவே.

முடிப்பு.

அருங்குணம இதனுலே வளர்ந்திடும் மேன்மேலே
பொருந்திய அருளோடும் திருந்திய மனதோடும்
(வி)

சந்தம்.

அகனமர்ந்துதிரு மகளுமுறைகுவாள்
முகனமர்ந்துதக விருந்திடுமகமே

வருவிருந்ததுவும் நனிமகிழ்ந்திடவே
உணவிடுவாய்.

பரிவதுகொண்டரும் பொருளது கருதியே
இனியது புரிபவர் விருந்தெதிர்கொள்பவர். (வி)



## 10. இனியவை கூறல்.

அறத்துப்பால், அதிகாரம்-10.

இராகம்-சண்முகப்பிரியா. தாளம்-ஆதி.

எடுப்பு.

இனியவை சொல்லுக இதமுடனே—அது
இன்பம் தருவது மகிழ்வுடனே—சொல்லில். (இ)

தொடுப்பு.

கனியிருக்கக்காயைக் கவர்ந்திடலாமோ
கருத்தினில் அறத்தினை துறந்திடலாமோ. (இ)

படுப்பு.

அல்லவைதேய அறம்பெருகும் என்றும்
நல்லவைநாடி இனிய சொல்லின்.

முடிப்பு.

பல்வஃக வாழ்விலும் பண்புவளருமே
பரிவுடன் கருதிடில் அன்புபெருகுமே. (இ)

சந்தம்.

கனிந்த மனதினில் எழுந்த மொழியெனில்
மிகுந்த துயரதும் மறைந்திடுமே.
கண்ணன் குறள்நெறிப் பனுவலிலே
எண்ணம் பெருகிடும் புதுமையிலே
பணிவுடன் இனியசொல் தெளிவுடன் புகல்வது
அணிவதில் அழகுடை பெருமணி நிகர்வது. (இ)

## 11. இறைமாட்சி.

பொருட்பால். அதிகாரம்-39.

இராகம்-பாகேஸ்வரி. தாளம்-ஆதி.

எடுப்பு.

முறைசெய்து காத்திடும் மன்னவனை மக்கள்
இறையென வைத்திடுவர்—புவியில் (மு)

தொடுப்பு

குறைகூறிச்சினந்தாலும் செவிகைப்ப
மொழிந்தாலும்
நிறைசெய்யும் மன்னவனே உலகாள வல்லவனும்.
(மு)

படுப்பு,

அறன் இழுக்காது அல்லவைநீக்கி
மறன் இழுக்காமானம் உடையதே அரசு.

முடிப்பு.

திறனொடு இயற்றலும் ஈட்டலும் காத்தலும்
அறனொடு வகுத்தலும் ஆளுவோர்க்கழகாமே (மு)

சந்தம்.

அச்சாமை ஈகை அறிவூக்கம் நான்கினொடு
எஞ்சாமை வேந்தர்க்கு இயல்பாகும்
துஞ்சாதபடைகுடி கூழமைச்சதுவுடன்
மிஞ்சாத நட்பரணும் இனிதாகும் அந்த (மு)

# 12. கல்வி

பொருட்பால். அதிகாரம்-40

இராகம்-மோகனம். தாளம்-திஸ்ரசாபு.

எடுப்பு.

கற்கக் கசடறக் கற்பவை—கல்வி
கற்றபின் நிற்கத் தகவோடு—நன்கு (க)

தொடுப்பு.

தொட்டனைத்தூறும் மணற்கேணிபோலே
கற்றனைத்தூறும் அறிவதனாலே. (க)

படுப்பு.

தாமின்புறுவது உலகின்புறக்கண்டு
காமுறுவாரே கற்றறிந்தார்.

முடிப்பு.

பூமியில் எந்நாளும் தந்நாடதாகுமே
போற்றியேற்றுவர் பொன்னானமேதையை. (க)

சந்தம்.

எண்ணதுவும் எழுத்ததுவும்
கண்ணெனவே கொள்வார்
ஏற்றமுறும் தோற்றமுடன்
வாழ்வினிலே வெல்வார்
யாதானும் நாடாமால் ஊராமல் கல்வியது
சாகாத கலையாகும் போகாத செல்வமது. (க)

# 13. கல்லாமை.

பொருட்பால். அதிகாரம்-41.

இராகம்-சிந்துபைரவி. தாளம்-ஆதி.

எடுப்பு.

கல்லாமை வெகு பொல்லாது—கல்வி
கற்றோர்முன் பெருமை நில்லாது—தம்பி. (க)

தொடுப்பு.

கல்லாதவன் அறிவை சொல்லாடல் காட்டிவிடும்
செல்லாது எந்தநாளும் செல்வமும் சிறக்காது. (க)

படுப்பு.

அரங்கின்றிவட்டாடி அற்றேநிரம்பிய
நூலின்றிக் கோட்டிக் கொளலாகும்.

முடிப்பு.

தரங்குறையா எழிலும் துலங்காது இதனலே
நிறங்கொளும் மண்பாவை விளங்குவது
போலே (க)

சந்தம்,

நிலத்தின்வளமதை குறைத்துவருமிடி
களரதுபோல்
பிறர்க்கும் பயனிலை தனக்கும்பயனிலை
அறிவிலியால்

எதற்கும் பொருளதன் நலத்தில் உயர்வது
இனிக்கும் நிலைவரும் கல்வியதால்

விலங்கொடு நிகரென மனிதரை வைப்பரே
இலங்கிடு நூலவர் இதனை யுணருவாய்.



# 14. கேள்வி.

பொருட்பால். அதிகாரம்-42.

இராகம்-கருநாடக தேவகாந்தாரி. தாளம்-ஆதி

எடுப்பு.

கேள்விச்செல்வம் சிறந்த செல்வமடா—தம்பி
கேட்குந்தோறும் விரிந்து செல்லுமடா—என்றும்
(கே)

தொடுப்பு.

ஆள்வினை அறவோரின் வாய்மொழி கேளாது
அரைத்ததையே அரைப்போர் அவிந்தாலென்
வாழ்ந்தாலென். (கே)

படுப்பு.

நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய
வாயினராதல் அரிதாமே.

முடிப்பு.

இணங்கிய பொழுதெலாம் தினந்தினம் கேட்பாய்
இதமான அறிவுரை பதம்பெற உதவிடும். (கே)

சந்தம்.

செவிக்குணவில்லாத பொழுதினில் துணையென
வயிற்றினுக் குணவது சிறிதுகொடு
பசித்திரு விழித்திரு பகுத்தறிவுக் கண்ணன்
பாடலைச் சுவைத்துநல் லறிவுபெறு.
கற்றிலனாயினும் கேட்கும்பொருளது
உற்றிடுதுயரதை போக்கற்கினியது. (கே)

# 15. அறிவுடைமை.

பொருட்பால். அதிகாரம்-43

இராகம்-காபி தாளம்-ரூபகம்.

எடுப்பு.

அறிவுடைமையே எல்லா முடைமை
பிறிதுடைமையில் பெருமை ஏதய்யா—நல்ல (அ)

தொடுப்பு.

செறிவுடைமையாய்த் தெளிவும் அறிவும்
சேர்ந்தவரைப்பகை தான்வெல்லுமோ?
நெறியுடைஞானியர் நட்பினைப் பெறுதல்
நேர்மையிலே நம்மறிவை
கூர்மையொடு வைப்பதுவாம். (அ)

படுப்பு:

எப்பொருள் யாரார்வாய்க் கேட்பினுமப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவே.

முடிப்பு.

தப்பேதுமில்லாத தன்மான நெறியில்
தாழ்ந்தவர் அறி விலரேயல்லரோ?
எப்போதுமுலகத்தோ டொன்றியவாழ்வில்
ஏற்றமதைப் பெற்றிடுவார்
போற்றிய நூல் கற்றவரே (அ)

சந்தம்.

தன்மனம் போனவிடந்தனில் சென்றுவிடாமலே
கடிந்து
நன்னெறியாதெனக்கண்டதில் துன்பமில்லாதவை
தொடர்ந்து
செல்லுவரே -- அறிவினில்
வல்லவரே — தமிழினில்
கண்ணனிசைப் பாடுவதால்
எண்ணமதில் நாடிடுமே (அ)



# 16. குற்றங் கடிதல்.

பொருட்பால் அதிகாரம்-44,

விருத்தம்.

1. செருக்கும் சினமும் சிறுமையும் இல்லார்
பெருக்கம் பெருமிதம் நீர்த்தென
இருக்கும் நெறியில் இயல்பொடு நின்றிடில்
இனிமையும் பெருமையும் வருகுமே!
தருக்கும் பழியும் வருமுனம் காத்தல்
தடுக்கும் வருபெருங் கொடுமையைத்
திருக்குறளறமதில் தெளிவுறும் போதிலே
வருத்துமக் குற்றமும் நீங்குமே.

2, தினைத்துணையாம் குற்றம் வரினும் கொள்வார்
பனைத்துணையாய்ப் பழிநாணு வாரெனும்
மனைத்துணையாம் குறள்நெறி விளக்க முணர்ந்தே
வினைத்துணையாய்க் கொள்கநல் வாழ்விலே.
எனைத்துணையும் நில்லுமோ தவறிடில் மானம்
எரிமுன்னர் வைத்தாறு போலாகும்
அனைத்துணையும் தன்னுளே பெருகும் குற்றம்
அடக்குக வல்லாண்மை வளர்கவே

3. செயற்பால செய்யாது இவறியான் செல்வம்
உயற்பால தன்றியே கெடுமெனல்.
வியப்பான குறளறம் விளக்கிடும் நன்னெறி
பயப்பதாம் பயனதை உணருகவே
புயத்திலே வலிமிகும் மறவனும் கடிந்திடும்
பயத்திலே திருந்துதல் அறமலவோ?
நயத்திலே தீங்கான வினையெதுவும் புரிதல்
கயத்திலே கழுநீரைப் பெய்வதுவாம்.

## 17. பெரியாரைத் துணைக்கோடல்.

பொருட்பால், அதிகாரம்-45.

இராகம்-கதனகுதூகலம். தாளம்-ஆதி.

எடுப்பு.

பெரியார்துணை பெருமையே தரும்
பெறுவாயெனில் திறனதே மிகும் (பெ)

தொடுப்பு.

அரிதாம்செல்வம் அறவோர் தொடர்பே
அருளாளர்தன்மை அத்துணையும் நன்மை. (பெ)

படுப்பு.

இடிப்பாரையில்லா ஏமரா மன்னன்
கெடுப்பாரில்லானும் கெடுவதுண்டு.

முடிப்பு.

படிப்போர்குற்றம் தடுப்போரே மேலோர்
பகுத்தறிவுப் பண்பு பயனளிக்கும் நன்கு. (பெ)

சந்தம்.

தம்மிற் பெரியவர் தமராய் ஒழுகுதல்
வன்மைக்குரியது வாய்மை தருவது. (பெ)

கடிந்தறிவு தரும் பெரியோரால்
மிகுந்த நலமது விளைவாகும்

ஒடிந்தமனமதும் புதுவுணர்வெய்தி
படிந்துநடைபெறும் பயன்மிகவடைய. (பெ)

## 18. சிற்றினம் சேராமை.



பொருட்பால். அதிகாரம்-46.

கண்ணிகள்.

1. சிற்றினம்சேராது அஞ்சிடும்பெருமை
சுற்றமாய்ச்சூழுமே சிறுமை
வற்றிடும்கேணியோ ஆமையைக்காவாது
வாய்மையில் பகைமை பூவாது.

2. மனத்தானும் அறிவை இனத்தானும் உணர்வை
மதிப்பிடும திருக்குறள் அறமே
கனத்தாலும் பயனேது வினைத்தூய்மை யில்லாது
கருத்தினில் வைத்திடுவாய் நிதமே.

3. நிலத்தியல்பால்நீரும் திரிவதுபோலே
இனத்தியல்பாகுமே தன்மை
குலத்திலில்லைபேதம் குணத்தினுலமைவதே
விலக்குக சிற்றினமே நன்மை.

4. நல்லினச் சேர்க்கைபோல் நற்றுணைவேறில்லை
அல்லினம் விளைப்பதோ தொல்லை
கல்லினும் வலிவான நல்லசான்றோர்க்கும்
கருதிடில் இனநலமே எல்லை

# 19. தெரிந்து செயல்வகை.

பொருட்பால். அதிகாரம்-47.

இராகம்-இந்துஸ்தான்காபி. தாளம்-ஆதி.

சிந்து.

1. தொடங்குமுன் நன்கறிந்து தொடங்கு—வரும்
தோல்வியிலே வெல்கபண் மடங்கு—வாழ்வு
தொடர்புள்ள தொழிலிலே படருதல் விளைவது
நலமாம்—இன்பம்—பலவாம்

2. தேர்ந்தெண்ணிச் சேர்குவாய் இணைந்து
—சேர்ந்து
தெரிந்துவினை செய்வாய் முனைந்து—பின்னர்
நேர்ந்திடும் நிலைமையும் சேர்ந்திடும் புகழையும்
பார்ப்பாய்—வளம்—சேர்ப்பாய்.

3. செய்தக்க அல்லசெய்யக் கெடுமே—நன்கு
செய்தக்க செய்யாமையால் கெடுமே-கொள்க
உய்தற்கும் உரிமையை எய்தற்கும் இனியதே
ஊக்கம்—அதன்—ஆக்கம்.

4. தக்கவகையற்றதொரு முயற்சி—என்றும்
தந்திடுமே இழப்புடன் அயர்ச்சி—மனப்

பக்குவமும் பண்புடைமை மிக்கவுள
எச்செயலும்
காக்கும்—பயன்—தேக்கும்.

5. திருக்குறள் இசைத்தமிழ்ப் பாட்டு—இதைத்
தீட்டிய கண்ணன் குரல் கேட்டு—நன்கு
தெரிந்து செய்யும்வகையை புரிந்தினி
வாழ்வோர்க்கு
நன்மை—தரும்—உண்மை.



# 20. வலிமையறிதல்.

பொருட்பால். அதிகாரம்-48

இராகம்-நாதநாமக்கிரிலயை. தாளம-ரூபகம

எடுப்பு.

வலிமையறிகுவாய்—நல்ல பலனைப் பெறுகுவாய்
வகையுடன்எதிலும் மிகையினை வுணர்ந்து. (வ)

தொடுப்பு.

நிலைமையறிந்து செயலில் முனைந்து
நின்றிடுவாய் துணைவலியில்
வென்றிடுவாய் பகையதனை. (வ)

படுப்பு.

பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெய்தாலே.

முடிப்பு.

கோலினைவுணர்ந்து குடிநிலையளந்து
கொண்டிடுக தன்னளவை
கண்டிடுக பன்னலமும். (வ)

சந்தம்.

ஈவதிலும் அளவறிந்து
பெறுவதிலும் வகையறிந்து

ஆவதிலும் அழிவதிலும்
அனுபவமே தானுணர்ந்து

திருக்குறளின் கண்ணனிசைப் பாடலிலே—
சொல்லும்
பொறுப்புடைய கொள்கையதை நாடிடுவாய்—
வெல்லும்

ஏற்புடைமை கேட்பதிலே
வேட்படைவாய் நோற்பதிலே (வ)



# 21. காலம் அறிதல்.

பொருட்பால்; அதிகாரம்-49;

இராகம்-சாரங்கா. தாளம்-ஜம்பை.

எடுப்பு:

காலமது பருவமது கண்டறியும் தன்மையது
கரைந்திடும் செல்வமதை கட்டுகின்ற கயிருமே
(கா)

தொடுப்பு.

ஞாலமே கருதினும்கை கூடுமே இடமறிந்து
காலமும் தானறிந்து கருதியே முயலுனர்க்கு (கா)

படுப்பு.

எய்தற்கு அரியது இயைந்தக்கால் அந்நிலையே
செய்தற்கு அரியசெயல் செய்திடுகவே;

முடிப்பு.

பெய்மழைப் பருவமதில் செய்தொழிலையே
மறந்தால்
கைவருமோ தானியமும் காத்திடுமோ பூமியதும்
(கா)

சந்தம்.

கொக்கொக்கவே கூம்பும் பருவத்ததனுடைய
குத்தொக்கவே காலம் வாய்த்திடுபோதினிலேயுள
(கா)

# 22. இடம் அறிதல்.

பொருட்பால். அதிகாரம்-50.

இராகம்-கல்யாணி. தாளம்-சாபு.

கண்ணிகள்.

1. இடங்கண்டு எதனையும் செய்திடுக
எட்டாத பழத்தையும் கொய்திடுக-மனு
தொடங்கிய வினையதை முடிப்பதிலே
தோன்றும்இடர் வெல்க துடிப்புடனே.

2. எண்ணிய பகைவரின் இதயம்கண்டு
ஏற்றஇடம் காணின் வெற்றியுண்டு-மனு
திண்ணிய ராதலே தன்னறிவாலே
தீரம் செல்லும்இடம் நன்கறிவாயே.

3. முதலையும் யானையை புனலில் வெல்லும
முன்னது தோற்குமே தரையில் என்றால்-
மனு
கதறினும் தேரோட்டம் கடலினில் செல்லாது
கப்பலோ தரையினில் நடவாது ஈதுண்மை.

4. அஞ்சாமை என்றுமே துணையாகும்
அரும்பகை கடந்திடப் புணையாகும்-மனு
எஞ்சாமை எண்ணியே ஏற்றவை செய்திடின்
எந்தப்பகைமையும் இருக்காது மெய்மை.

# 23. தெரிந்து தெளிதல்.

பொருட்பால். அதிகாரம்-51.

இராகம் கேதாரகௌளம். தாளம்-ரூபகம்.

எடுப்பு.

அறம்பொருளின்பம் தெரிந்துணர்ந்தவர்
திறந்தனில் மிகுவார்—நலமதுபுரிவதில். (அ)

தொடுப்பு.

புறங்கூறும்தன்மை பொல்லாமையென்பாரே
பெரும்பழி நாணாத குறும்பரை நம்பாதே (அ)

படுப்பு.

பெருமைக்குமேனைய சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல்லாகும்.

முடிப்பு.

அருமை உணராதார் அறிவை மதியாரே
மருகும் கொடியாரை மனதில் நினையாதே. (அ)

சந்தம்,

நற்குடிப் பிறந்தவர் தம்மை
நட்பெனக் கொள்வது நன்மை
நாடியுணர் ந்திடுபழி யதில்
நாணதில் அஞ்சிடு பவரை
கற்றநில் நிற்பவர் கண்ணனின் பாடலிலே-நலமே
உற்றிடும் குறளறம் எண்ணித் தேடுவரே-தினமே.
(அ)

# 24. தெரிந்துவினையாடல்.

பொருட்பால். அதிகாரம்-52

இராகம்-தன்யாசி, தாளம்-ரூபகம்.

எடுப்பு.

நன்மையும் தீமையும் நன்றிந்தாற்றுகவே—அந்த
வன்மையும் தன்மையும் வளம்பெற தினந்
தினம் (ந)

தொடுப்பு.

அன்பறிவு தேற்றம் அவாவின்மைதன்னில்
நன்குடையோனாக நால்வகைத்தெளிவும்
தென்புடனேபெற்று திறனதில்மிகுத்து
செயல்முறைகள் ஓர்ந்தவனே
உயர்வினையில் தேர்ந்திடுவான்; (ந)

படுப்பு.

வாரிபெருக்கி வளம்படுத்துற்றவை
ஆராய்வான் செய்கவினையே.

முடிப்பு.

காரியம் எதனிலும் காரணம் உணர்ந்தே
கருத்துடன் முடிக்கும் பொறுப்பினனாக
வீரியவளமும் மேழியின்செல்வமும்
விதவிதமாம் பொருள்குவிய
வினைபலவும் பயிலுகவே. (ந)

சந்தம்

வினைக்குரிய நாடியதன்பிறகவனை—முறையொடு
அதற்குரியவனுகவே செய்துவிடு—திறனொடு

முழக்கிடுக கண்ணன் இசைப்பாடலினை-மனமே
பழக்கிடுக தெரிந்து விளையாடலினை-முனமே

இதனை இதனால் இவனே முடிக்குமென்பதை
யறிந்து
அதனை அவன்கண்விடலே வினைக்குரிய
நன்மருந்து. (ந)



# 25. சுற்றந்தழால்.

பொருட்பால். அதிகாரம்-53.

இராகம்-ஆனந்தபைரவி. தாளம்-ஆதி.

எடுப்பு.

பழமை பாராட்டுக—நண்பா
பற்றிழந்தபோதும் சுற்றத்தார் கண்ணே. (ப)

தொடுப்பு.

மழையென வாழ்ந்தாரும் நலிந்து போவதுண்டு
பிழையெதும் மறந்தே பெருந்தன்மையுடனே. (ப)

படுப்பு.

பெருங்கொடையாளன் பேணுன் வெகுளியவன்
மருங்குடையாரிந்த மாநிலத்தேது?

முடிப்பு.

நெருங்கியஉறவினர் நீங்கினும் ஒருநாளில்
பொருந்தவே கூடுவார் வருந்துயர் நீக்குவார். (ப)

சந்தம்.

மனமதில்கலந்து உரையினில்கனிந்து பழகிடுவாய்
குணமதில் வளர்ந்து குளமென நிறைந்து
உதவிடுவாய்

திருக்குறள் அறமிதை விளக்கிட இசையில்
பகுத்தறிவுக் கண்ணன் தொகுத்திடும் பனுவல்
குற்றம் பார்க்கில் சுற்றமில்லையென
பற்றும்பாசமும் பெற்றவர் சொல்லுவார். (ப)

# 26. பொச்சாவாமை

பொருட்பால். அதிகாரம்-54.
இராகம்-பேகாக். தாளம்-ரூபகம்.

எடுப்பு.

மறதியுன் றன் பெருமைபோக்கும்
மதிமயக்கும் வறுமைபோலே. (மற)

தொடுப்பு.

பொருளிருந்தென்ன புகழிருந்தென்ன
பொறுப்புடனதை போற்றுதுவிடுக்கும்.(மற)

படுப்பு

அரியவென்றாகாததில்லை பொச்சாவா
கருவியினாலே போற்றிச் செய்யின்,

முடிப்பு.

பெரிதேகடமை மறவாத் திறமை
எளிய வினையும் நினைவில் பதிக. (மற)

சந்தம்.

மறதியின் சோர்வுடன் குலவிடும்
மனிதனைப் பேர்புகழ் மறந்திடும்
மடமையில் மகிழ்வினில் கடமையை
மறந்தவர் இழிவினைப் பெறுபவர்
பயந்து மறந்து கெடாதே-குலைந்து மெலிந்து
விடாதே (மற)

# 27. செங்கோன்மை.

பொருட்பால். அதிகாரம்-55

இராகம்-நாட்டைக்குறிஞ்சி. தாளம்-ஆதி.

எடுப்பு.

கோன்மையில் சிறந்தது செங்கோன்மை
குணமொடு நிகழ்வது அருளாண்மை—உண்மை.
(கோ)

தொடுப்பு.

மேன்மைநியதியுடன் வாய்மை புரத்தலால்
மாமழை பொழிந்தின்ப ஞாலம்செழிக்குமே (கோ)

படுப்பு.

குடிபுறங் காத்தோம்பி குற்றம் கடிதல்
வடுவன்று வேந்தன் தொழிலாகும்.

முடிப்பு.

நொடிவுறும் மக்களின் பெருகிடும்துயரை
நடுவு நிலைமையொடு சடுதியில் மாற்றிடும் (கோ)

சந்தம்.

நிலையில் குறையகல வருத்தல்
கொலையின் கொடியவரை ஒறுத்தல்
குடிகளை யருளொடு தழுவிடும் மன்னவன்
அடிநிழல் கருதிய உலகதை காத்திடும். (கோ)

## 28. தகையணங்குறுத்தல்.

இன்பத்துப்பால், அதிகாரம்-109

இராகம்-கமாஸ். தாளம்-ஆதி

எடுப்பு.

அணங்கோ ஆய்மயிலோ—இவள்
கனங்குழை மாதரார் வணங்கிடும் சிலையோ (அ)

தொடுப்பு.

இணங்காக் கொங்கைமேல் யானைமுக படாமோ
இணங்கிய பார்வையில் போர்ப்படையெடுப்போ.
(அ)

படுப்பு.

கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்
நோக்கம் இம்மூன்றும் இணைந்ததுவோ

முடிப்பு.

ஆற்றலால் பகைவரை அழிக்குமென் புயவலி
ஆண்மையும் இவளரும் அழகினில் குலைந்ததே.(அ)

சந்தம்.

பண்டறியேன் உயிர் கொண்டிடும்நமனை
பெண்டகையாளிவள் கண்ணிலுளான்
உண்டவர்கள்ளினை கொண்டுமயங்குவர்
கண்டவர்மயங்கும் காமமிதே
நோக்கெதிர் நோக்கிய நயனவுரைகளோ
தாக்கிடும் படைகளின் விழுமிய குரலோ (அ)

# 29. குறிப்பறிதல்.

இன்பத்துப்பால். அதிகாரம்-110

இராகம்-சாமா. தாளம்-ஆதி.

எடுப்பு.

கருங்கண்ணின் பார்வை கவருதடா— நண்பா
காமநோயாகவும் மருந்தாகவும் என்னை (க)

தொடுப்பு.

சுருங்கியகளவுகொள் கடைக்கண்நோக்கிலே
முழங்கிய கருத்துரை விளக்கியதுண்மையை (க)

படுப்பு.

கண்ணோடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொல்
என்னபயனுமில்லை ஈதுண்மை.

முடிப்பு.

பெண்ணிவள் எனைப்பார்த்து நகைத்து மலர்ந்தனள்
கண்ணினை நான்பார்க்க நாணிக்குனிந்தனள். (க)

சந்தம்.

இணங்கிய மனதுடன் இணங்காததுபோல்
இருவகை யுணர்வினைக் காட்டுருள்

கனங்குழை மாதிவள் மனங்குழைவதனெடு
இனங்கவர் போதையை ஊட்டுருள்

குறிப்பின் சிறப்பை அறிகுவனே?
சுவைப்பின் இனிப்பை உணருவனே?

ஏதிலர்போலிவள் நோக்குதல் புதுமை
காதலின் தூதுரை போக்குதல் அருமை. (௬)



# 30. புணர்ச்சி மகிழ்தல்.

இன்பத்துப்பால். அதிகாரம்-111

இராகம்-கானடா. தாளம்-ஆதி.

எடுப்பு.

இன்பமிது பேரின்பம் இணையில்லா இன்பம்
இதயம் நிறைந்தாளின் மலருடல்தழுவிய (இ)

தொடுப்பு.

கண்டு கேட்டுண்டுயிர்த்தே உற்றறியும்
ஐம்புலனும்
ஒண்டொடிக் கண்ணேயுள தண்டமிழ் அமுதாகும்
(இ)

படுப்பு.

நீங்கினல்சுடுகுதே நெருங்கினல்குளிருதே
யாண்டிவள் பெற்றனள் புதுத்தீயை?

முடிப்பு.

பாங்குறப்பிணைத்திடும் தேன்புதுச்சுவையிலே
பகுத்தறிவுவளர்க்கும் நூற்பொருளதுபோலே(இ)

சந்தம்,

பிணிக்கு மருந்தென எவர்க்கும் ஒன்றுளவாகும்
எரிக்கும் பிணியினைப் போக்கும்
மருந்திவளே தான்

சுவைக்கும் மென்தோள் துயிலிதுபோலே?
இடைத்து விடுமோ வானதன்மேலே

ஊடல் உணர்ந்திவளை
கூடி மகிழுவது
வாடிய உயிர்தழைத்
தாடி வருகுவது (இ)



# 31. நலம் புனைந்துரைத்தல்.

இன்பத்துப்பால். அதிகாரம்-112.
இராகம்—பேகடை. தாளம்—ஆதி.

எடுப்பு.

அனிச்சம்பூவே நீயறிவாயோ?
அழகியள் மெல்லியள்
உன்னிலும் என்னவள் (அ)

தொடுப்பு.

பனிச்சொல் பாவையாள் பன்மலர் மேனியாள்
கனிச்சாறு இதழினள் கற்கண்டு சுவையினள் (அ)

படுப்பு.

மாதர்முகம்போலே ஒளிவிடவல்லையேல்
காதலுடன்வாழி மதியென்பேன்

முடிப்பு.

கோதறுகலையின்பம் கொஞ்சிடும் காவியம்
கொண்டவன்மனதினுள் தங்கிய ஓவியம் (அ)

சந்தம்.

மதியும் மங்கையின் முகமும் தெரியா
விண்மீன் இனம்கதி கலங்கி
பதியின் மெய்போல் குறையில வான
தன்மையின் நலமதை வணங்கி
துதியது பாடிடும் அருமையிலே
துணையென தானவள் பெருமையிலே
அணிகலன் புனைந்த அழகுள கலைமகள்
தனிநலம் கனிந்த திருவளர் குலமகள் (அ)

## 32. காதற் சிறப்புரைத்தல்.

இன்பத்துப்பால். அதிகாரம்-113

இராகம்-கல்யாணி. தாளம்-ஆதி.

எடுப்பு.

கண்ணின்றும் போகானடி கலங்கி வருந்தானடி
என்னுயிர்த் தலைவனடி—மன்னன் (க)

தொடுப்பு.

தென்னவன் என்றனின் கண்ணிலே உறைவதால்
எண்ணிலேன் மையெழுத இதனையறிவாயோ? (க)

படுப்பு.

நெஞ்சத்துள் காதலன் நிலைத்துள்ளதாலே
அஞ்சுதென் உணர்வு சூடானதுண்ணவே.

முடிப்பு.

வஞ்சமாய் மறைவானே வாழ்கிறன் என்றனுள்
வாய்மையறியாவூரார் வம்புகள் பேசுறர் (க)

சந்தம்.

உவந்து எனதுயிர் நிறைந்து மகிழ்பவன்
இகந்து பிரிவதை நினைந்திடவோ?
இணைந்து காதலில் உறைந்து உடலொடு
கனிந்த சுகமதை மறந்திடவோ?
காதலன் மறைகுவன் கண்ணுள்ளே
கலந்து நிறைகுவன் என்னுள்ளே
சோதனை செய்திடும் காமனின் திறனடி
ஏதிலர் வைதிடும் வேதனை பாரடி (க)

## 33. நாணுத் துறவுரைத்தல்.

இன்பத்துப்பால். அதிகாரம்-114

இராகம்-இந்தோளம். தாளம்-ஆதி.

எடுப்பு

நாணமும் வீரமும் போயினவோ—காதல்
நங்கையால் பனைமடல் ஊர்வதுவோ—என் (நா)

தொடுப்பு.

மானொடுஉலவிடும் மலருடல்பெண்ணவள்
தேனொடு பாலன்ன தீஞ்சுவைக் காதலால் (நா)

படுப்பு:

தொடலைக்குறுந்தொடி தந்தாள் மலரொடு
மாலைஉழக்கும் துயர் வாழ்வினையே.

முடிப்பு.

உடலினுள் உயிரென ஒன்றிக்கலந்தாளை
கடலன்ன காமத்தில் கடிமணம் புரிந்திட (நா)

சந்தம்.

இரவில் பெருகும் பகலில் வருகும்
இன்பம் அலதொரு நிலைவேது?
உரலில் தலையை விடுமென் நிலையை
உலகம் அறியவே முடியாது
மிகுந்த காதல் கிளர்ந்து தெருவினில்
புகுந்த தாலது கரைந்து மறையுமோ (நா)

# குறள்மலர்.

ஆசிரியர்:

திருக்குறள்மணி: அ. இரத்தினசபாபதி.

பைந்தமிழ்க் குறள்நெறி பாரெலாம் பரவிட, பாட்டுக்கொருவர் புத்துரை புனைந்திட, கன்னட நாட்டினின்றும் கன்னித் தமிழில் மலருகின்ற மாத மலர்!

ஆண்டுக் கட்டணம் உருபா 3-50.

குறள்மலர் அலுவலகம்,
நந்திதுர்க்கம்,
உரிகம் அஞ்சல், கோலார் தங்கவயல்-2.
(மைசூர் மாநிலம்)

---

விரைவில் வருகிறது:

## குறள்நெறி இசையமுது.

இரண்டாம் பகுதி.

செந்தமிழ் அச்சகம், சலகண்டபுரம்.